கைவரை நில்லாது கனன்றகத் தெழுதரும்
வெய்துயிர்ப் படக்கிநீ வேண்டியது வேண்டாக்
180 குறிப்பெமக் குடைமை கூறலு முண்டோ
மறத்தகை மார்வன் மாய யானையிற்
சிறைப்படு பொழுதிற் சென்றவற் பெயர்க்க
மாய விறுதி வல்லை யாகிய
நீதி யாளநீ வேண்டுவ [1] வேண்டென
185 முகிழ்நகைக் கிளவி முகமன் கூறி
அண்ண லரசற் காகுபொருள் வேண்டும்
ஒண்ணுதன் மாத [2] ரொருப்பா டெய்தி
அரிதின் வந்த பெருவிருந் தாளரைச்
சிறப்புப் பலியருச் செல்வனிற் பேணும்
190 பெறற்கரும் பெரும்பண் பெய்திய தெனக்கென
அசதிக் கிளவி நயவர மிழற்றி
நேர்ந்த மாதரை நெடுந்தகைக் குருசில்
பேர்ந்த காலைப் பிழைப்பில ளுருதல்
அறியு மாத்திர [3] மவ்வழி யமைத்துச்
195 செறியச் செய்த செவிலியுந் தானும்
[4] மறுதா வுடைய மாயச் சூழ்ச்சி
உறுதியொ டொளித்தன ருள்ளியது [5]முடித்தென்.

கஎ—தேவியைப் பிரித்தது முற்றிற்று.

---

179. 'வேண்டியது வேண்டா' என்பது முதலியன வாசவதத்தை கூற்று. 182. அவனைப் பெயர்த்தற்கு.

187. ஒருப்பாடு - ஒருமைப்படுதல்.

189. செல்வனின் - அருகதேவனைப்போல.

190. பெரும்பண்பு - இல்வாழ்க்கையை நடத்துமுறைமை.

191. அசதிக்கிளவி - பரிகாசச்சொல்.

192 - 3. குருசில் - உதயணன். பேர்ந்தகாலை - பிரிந்தகாலத்தில். பிழைப்பு - கேடு; பிழைப்பிலளுருதல் - உயிருடனிருத்தலை.

194. அவ்வழி அமைத்து - அவ்விடத்தை இடமாக்கி.

பி - ம். 1 வேண்டுவென. 2 ரொருப்பாட்டெய்தி. 3 மவன்வழி. 4 மறுதாயுடைய. 5 முடிந்தென்.

## கஅ—கோயில் வேவு.

உள்ளியது முடித்த யூகியுஞ் செவிலியும்
ஒள்ளிழை மாதரொ டொளித்த பின்னர்ப்

(உதயணன் மீண்டு வருதல்)

பலாவம லசும்பிற் பயமலைச் சாரல்
உலாவேட் டெழுந்த வுதயண குமரன்
5 குழையணி காதிற் குளிர்மதி முகத்திக்குத்
தழையுந் தாருங் கண்ணியும் பிணையலும்
விழைபவை பிறவும் வேண்டுவ கொண்டு
கவவிற் கமைந்த காமக் கனலி
அவவுறு நெஞ்சத் தகல்விடத் தழற்றத்
10 தனிக்கன் றுள்ளிய புனிற்றுப் போல
விரைவிற் செல்லும் விருப்பின னாகிக்

---

கஅ—கோயில் வேவு.

[வாசவதத்தைக்கு வேண்டுவனவற்றைக் கைக்கொண்டு மலைச் சாரலிலிருந்து புறப்பட்டு வழியில் தீயநிமித்தங்களைக் கண்டு கவலையுற்றுவரும் உதயணன், அரண்மனை வேதலைக்கண்டு வாசவதத்தை இறந்தாளென்றே நிச்சயித்து மூர்ச்சித்து விழுந்து, தோழர் தேற்ற ஒருவாறு அவன் தேறியெழுந்தது இதனால் அறியலாகும்.]

3. "பலாவம லடுக்கம் புலாவ வீர்க்குங், கழைநரல் சிலம்பின்" அகநா. அ: 7.

4. உலாவேட்டு - உலாவுதலை விரும்பி; "நெடுந்தகைக் குருசிலை யுலாவெழப் போக்கி" என்றார்; உ. 17: 13 - 4.

6. தழை - தழைவிரவித்தொடுத்த ஒருவகை மாலை; தார் - மார்பின் மாலை; கண்ணி - தலைக்கணியுமாலை; பிணையல் - மலர்களை நெருக்கிப் பிணைத்தமாலை; சீவக. 193, 1338, 2054.

7. பிறவென்றது - சதங்கைமாலை, தொங்கல், கருப்பூரமாலை, தீம்பூமாலை முதலியவற்றை.

8 - 9. கவவு - தழுவுதல். அவவு - அவா; "கவவுக்கை விடப் பெறும் பொருட்டிறத், தவவுக்கை விடுத லறுமனும் பொருளோ" (கலி. கச.) காமக்கனலி, அகன்ற இடத்துச் சுடுமென்பதை, "நீங்கிற் றெறூஉங் குறுகுங்காற் றண்ணென்னுந், தீயாண்டுப் பெற்றா ளிவள்" (குறள், 1104) என்பதனாலும் அறிக.

10 - 11. "கறவைதம் பதிவயின், கன்றமர் விருப்பொடு மன்று நிறை புகுதர" (கலி. கக௧); "ஆன்கணங், கன்றுபயிர் குரல மன்று நிறை புகுதர" குறிஞ்சி. 217 - 8.

(குதிரை வருணனை)

1 கலினங் கவவிக் கான்று நுரை தெவிட்டும்
வலியுடை யுரத்தின் 2 வான்பொற் றாலிப்
படலியம் பழுக்கமொடு 3 பன்றகை வில்லாப்
15 பருமக் காப்பிற் 4 படுமணைத் தானத்
தருமைக் கருவி யலங்குமயி ரொருத்தின்
வயமாப் பண்ணி வாய்க்கயிறு பிணித்துக்

(குதிரையைப் பாகன் கொடுப்ப உதயணன் அதன் மீதூர்ந்து வருதல்)

குறுக்கை புக்க கொளுவமை கச்சையன்
அறைக்கண் மருங்கி 5 னகத்துளை யின்றிக்
20 கண்ணள 6 வமைந்து கதிர்த்த மூங்கிற்
பண்ணமை காழ்மிசைப் பசும்பொன் வலக்கும்
அடிநிலைச் சாத்தோ டியாப்புப் பிணியுறீஇ
வடியிலைக் கதிர்வாள் வைந்நுனைக் குந்தமொடு
வார்ப்பி னமைத்த யாப்பமை யரும்பொறி
25 மணிக்கை மத்திகை யணித்தகப் 7 பிணித்துக்
கோற்கமை 8 வுறுநடைக் குதிரைக் கோதிய
நூற்க ணாளரொடு நுனித்துக் கதிவினாய்
வாக்கமை வாளன் கூப்புபு வணங்கிக்
கடுநடைப் புரவி கைம்முதல் கொடுப்ப

12. கலினம் கவவி - கடிவாளத்தை உள்ளிட்டு. நுரையைக் [கான்று.
13. தாலி - ஓராபரணம். பன்றகைவு - பல தையல்.
15. பருமமாகிய காப்பு.
16. கத்தரிகையினுற் கொய்யப்பட்டு அசைகின்ற மயிரையுடைய [பிடரியினையும்.
17. வயமா - குதிரை.
18. குறுக்கைபுக்க கொளு - புலிவடிவமைந்த மூட்டுவாய்.
19. அறை - பாறை. அகத்துளை - உட்டுளை. 20. கண் - கணு.
21. காழ் - கோல். பொன் வலக்கும் - பொற்பூண் கட்டிய.
22. அடிநிலைச் சாத்து - அங்கவடி.
23. குந்தம் - கைவேல்.
26. கோற்கு அமைவுறும் நடை - அம்பின் வேகத்திற்கு ஒத்த வேகம்; "கணைச்செல வொழிக்குங் கடுமைத்து" க. 38 : 317 ; பு. [வெ. 138.
28. கூப்புபு - கையைக் குவித்து.
29. கைம்முதல் - உதயணன் கையில்.

பி-ம்.1 கலிநலங்கலவி. 2 வான்பொற்பன்றலி. 3 பன்றைசயில்லாப். 4 படுமனைத். 5 னகத்துணை. 6 வமைத்துக். 7 பிடித்துக். 8 குறுநடைக்.

30 அடுதிற லண்ண லணிபெற வேறி
மறுவின் மாநகர் குறுக வருவழி

(தீய நிமித்தம்)

இடுக்கண் டருதற் கேது வாகி
இடக்க ணாடலுங் கொடித்தோ ளங்கலும்
ஆருயிர்க் கிழத்தி யகன்றன ளிவணிலள்
35 நீமலர்ப் படலை நெடுந்தகை யாள
காறு யாகி யாறு விரக்கமொ
புழுக்கி நெருநலொ டயங்குவை யினியென
இழுக்கும் புட்குர லுட்படக் கூறிய
நிமித்த முஞ் சகுன முநயக்குண டன்மையு
40 நினைத்தனன் வருஉ நேரத் தமைத்த

(உதயணன் புகைத்தோற்றத்தைக் காணுதல்)

[1] நன்னிதிப் பலகைச் சந்தனச் சார்வணைக்
கன்றுயர நினைத்த கைப்புடை யாவணத்
திருமணி யருங்கல மொளிதிகழ்ந் தரீஇக்
காலத்தி னடக்குங் கூலக் கொழுங்கடைக்
45 கடுவுங் [2] கொட்டமுங் காழகிற் றுறையும்
அரக்கு மதிங்கு மரும்பெறற் பயினும்
நறையு நானமு நாறிரு வேரியும்

---

31. மாணகர் - இலாவாண நகரம்.
32. இடுக்கண் - துன்பம்.
32 - 3. ஆடவர்க்கு இடக்கண் ஆடலும், இடத்தோள் துடித்தலும் [தீயநிமித்தம்.
35. படலை - மாலை.
38. புள் - மரங்கொத்தி முதலிய பறவைகள்.
41. நிதிப்பலகை - பொற்பலகை. சார்வு அணை - சார்தற்குரிய [அணை.
42. ஆவணத்து - கடைவீதியில்.
43. தரீஇ - வருவித்து.
44. கூலம் - பலபண்டம்.
45. கடு - கடுக்காய். அகிற்றுறை - அகிற்கட்டை.
46. அதிங்கு - அதிமதுரம். பயின் - பிசின்.
47. நானம் - புழுகு. இருவேரி - வெட்டிவேர்.

பி - ம். [1] தண்ணதிப். [2] கோட்டமுங்.

அறைவெள் ளாரமு மன்னவை பிறவும்
அண்ணரும் பேரழ லாக்கிய கமழ்புகை
50 மாதிரத் தியங்குஞ் சோதிடர் விமானமும்
வாச மூட்டும் வகையிற் றாகி
மஞ்சொடு மிரைஇ வெஞ்சுடர் மழுக்க
இருள்படப் பரந்த மருள்படு பொழுதிற்
கண்டா னாகித் திண்டேர் ருதயணன்
55 வண்டார் கோதை வாசவ தத்தை
இருந்த விடமும் பரந்தெரி தோன்றவவட்
கேதுகொ லுற்றதென் றெஞ்சிய நெஞ்சின்
ஊறவ னுண்மை தேறின னாகிச்
செல்லா நின்ற காலை வல்லே

(உதயணனும் வயந்தகனும் நிற்றல்)

60 மாய மள்ளரை யாயமொ டோட்டி
உருமண் ணுவாவும் வயந்தக குமரனும்
பொருமுர ணண்ணல் புகுதரும் வாயிலுட்
பொச்சாப் போம்புதல் புரிந்தனர் நிற்ப

(காஞ்சனமாலையின் கலக்கம்)

எச்சார் மருங்கினு மெரிபுரை தாமரை
65 கண்ணுற மலர்ந்த தெண்ணீர்ப் பொய்கையுள்
நீப்பருஞ் சேவலை நிலைவயிற் காணாது
பூக்கண் போழும் புள்ளிற் புலம்பி

50. மாதிரத்து - ஆகாயத்தில். சோதிடர் - சோதிட்கர்; சந்திரன், சூரியன், மற்றைக்கோள்கள், 27 - நக்ஷத்திரங்கள், தாரகைகளென்பார்; "சந்திரருஞ் சூரியருந் தாரகையு நாண்மீனும், வெந்திறல கோட்களுமா மெனவிளங்கி விசும்பாரு, மந்தரத்தை வலஞ்சூழ்ந்து வருபவரு நிற்ப வருஞ், சுந்தரஞ்சேர் மணிமுடியாய் சுடர்பவருஞ் சோதிடரே" (சூளா. துறவு. 206.) இவர்கள் பஞ்சவரென்றுங் கூறப்படுவர்.

49 - 51. "முகிற்றலை மதிய மன்ன முழுமணி மாடத் திட்ட, அகிற் புகை தவழ்ந்து வானத் தருவிசும் பறுத்து நீண்டு, பகற்கதிர்ப் பரப்பிற் றாகிப் பஞ்சவர் விமான மூட்டிப், புகற்கரு மமரர் கற்பம் புக்கயா வுயிர்த்த தன்றே" சீவக. 600.

52. மிரைஇ - கலந்து. 63. பொச்சாப்பு - சோர்வு.

67. புள் - அன்னம்.

64 - 7. "சேக்கை காடித்தன் சேவலைக் காணிய, பூக்க ணூடு மோர் புள்ளுமொத் தாளரோ" சீவக. 1362.

எரிதவழ் கோயி லெவ்வழி மருங்கினும்
திரிதர லோவா டய்ந்துநிற மழுங்கிக்
70 கட்டழற் கதிய நெட்டிருங் கூந்தல்
1 புதையெரி புற்றப் புன்சொற் கேட்ட
பெரியோர் போலக் கருகி வாடிய
தகையழி தாமமொடு தாழ்வன பரப்பித்
தோழியைக் காணாள் சூழ்வளிச் சுழற்றியள்
75 செவ்விய தன்கையி னவ்வயி றதுக்கா
நாவலந் தண்பொழி லண்ண லோட்டிய
காவலன் மகளே கணங்குழை மடவோய்
மண்விளக் காகி வரத்தின் வந்தோய்
பெண்விளக் காகிய பெறலரும் பேதாய்
80 பொன்னே திருவே 2 யன்னே யரிவாய்
நங்காய் நல்லாய் கொங்கார் கோதாய்
வீணைக் கிழத்தி வித்தக வுருவீ
தேனேர் கிளவீ சிறுமுதுக் குறைவீ
உதையண குமர னுயிர்த்துணைத் தேவீ
85 புனைநய முலகவயிற் புக்கனை யோவெனக்
கானத் தீயிடைக் கணமயில் போலத்
தானத் தீயிடைத் தானுழன் றேங்கிக்
காணல் செல்லாள் காஞ்சனை புலம்பிப்
பூசல் கொண்டு புறங்கடைப் புரளும்

(உதயணன் கண்டு மூர்ச்சித்தல்)

90 ஆரழலத் திடையே யண்ணலுங் கதுமென
வாயில் புகுந்து வளங்கெழு கோயில்
தியுண விளியுந் தேமொழிச் செவ்வாய்க்
காஞ்சன மாலை கலக்கமுங் காணாப்
பூங்குழை மாதர் பொச்சாப் புணர்ந்து

70. கட்டழற்கதிய - மிக்க நெருப்பாற் கதுவிய.
74. சூழ்வளி - சுழல்காற்று. சுழற்றி - சுழற்சி.
77. காவலன் - பிரச்சோதனன். 80. அன்னே - தாயே.
89. பூசல் - ஆரவாரம்.
92. விளி - ஓசை. 94. பொச்சாப்பு - பொல்லாங்கை.

பி - ம். 1 புதையெரிப்புற்ற. 2 யன்ணய்.

95 கருவி யமைத்த காலியற் செலவிற்
புரவியின் வழுக்கிப் பொறியறு பாவையின்
முடிமிசை யணிந்த முத்தொடு பன்மணி
விடுசுடர் விசும்பின் மீனெனச் சிதறச்
சாந்துபுல ராகத்துத் தேந்தார் திவளப்
100 புரிமுத் தாரமும் பூணும் புரள
எரிமணிக் கடகமுங் குழையு மிலங்க
வாய்மொழி வழுக்கி வரையின் வீழ்ந்தே
தேமொழிக் கிளவியிற் றிறல்வே றாகி
இருநில மருங்கிற் பெருநலந் தொலையச்
105 சோரு மன்னனை யார்வத் தோழர்

(தோழர் உபசரித்தலும் அவன் தேளிந்து எழுதலும்)

அடைந்தனர் தழீஇ யவலந் தீர்க்கும்
கடுங்கூட் டமைத்துக் கைவயிற கொண்ட
போகக் கலவை யாகத் தப்பிச்
சந்தனங் கலந்த வந்த ணறுநீர்த்
110 தண்டளி சிதறி வண்டின மிரியக்
குளிரிமுதற் [1] கலவையிற் கொடிபெறக் குலாய்
... ...................பொண்மணித் தட்டப்
பவழப் [2] பிடிகை பக்கங் கோத்த
திகழ்பொன் னலகிற் செஞ்சாந் தாற்றியிற்
115 பன்முறை வீசத் தொன்முறை வந்த

96. பொறியறுபாவையின் - எந்திரமற்ற பாவையைப்போல; க. 33 : 146; 36 : 60. 99. தார் திவள - மாலை குழைய.
102. மொழி வழுக்கி - சொல்தமொறி.
103. தேமொழிக்கிளவியின் - வாசவதத்தையின் பிரிவால்.
106. அவலம் - மூர்ச்சையை.
107. கடுங்கூட்டு - மூர்ச்சையை விரைவில் தீர்க்கும் மருந்து.
108. போகக்கலவை : க. 38 : 177.
109. நறுநீர் - பனிநீர்; க. 34 : 188. 110. தளி - துளி.
111. குளிரி - செங்கழுநீர்; பூந்தடுக்குமாம். கொடி - ஒழுங்கு.
113. பிடிகை - கைப்பிடி. 114. சாந்தாற்றி - விசிறி.
109 - 15. சீவக. 2478, 2615 - ஆம் பாடல்களைப் பார்க்க.

பி - ம். [1] கவ்வையிற். [2] பீடிகைப்.

பிறப்பிடைக் கொண்டைப் 1 பெருமனைக் கிழத்தியை
மறப்படை மன்னன் வாய்சோர்ந் தரற்றச்
சேற்றெழு தாமரை மலரிற் செங்கண்
ஏற்றெழுந் தனனா லினியவ ரிடையென்.

கஉ—கோயில் வேவு முற்றிற்று.

---

116. உ. 16 : 39 - 41 ; ௬. 6 : 64.
118-9. கண்ஏற்று - கண்மலர்ந்து; கலி. கஉ : 8 ; பு. வெ. 197.

பி - ம். 1 பெரும்பணைக்.

---

## கக—தேவிக்கு விலாவித்தது.

ஏற்றெழுந் தனன்பி னினியோர் சூழ்இ
ஆற்றல் சான்ற நாற்றுறை மருங்கிற்
பழையவும் புதியவு முறைவயிற் பிரியார்
காரண முரைப்பவு மோர்வன ரில்லான்

(உதயணன் தீயில் விழச் செல்லல்)

5 அழுங்கிக் கிளவிய வம்பிணை மூழ்கிய
பொருந்தி யானும் புகுவென் சென்றென
புரிந்த கந்தி னெரிந்த வேயுள்
அரிந்த யாப்பிற் சொரிந்த கடுங்காழ்

---

கக—தேவிக்கு விலாவித்தது.

[அங்ஙனம் எழுந்த உதயணன் பிரிவாற்றாமையாற் பின்னும் வருந்தி, யானும் இறப்பேனென்று தீயில்விழச் சென்றதும், பல நியாயங்களைக் கூறித் தோழர் தடுப்பத் தடையுண்டு அப்பால் அவன் அவளுடைய தலைச்சிகலன்கள் முதலியவற்றை வருவித்து ஒவ்வொன்றையும் தனித்தனியே நோக்கிப் பலவாறு புலம்பியதும் பிறவும் இதனால் அறியலாகும்.]

1. இனியோர் - தோழர் முதலியோர். 4. இல்லானுகி.
3 - 4. பிரியாராய்ப் பழையவும் புதியவுமாயவற்றை உரைப்பவும்.
7. கந்து - தூண். வேயுள் - மேற்பரப்பு.
8. அரிந்தயாப்பு - அறுபட்ட கட்டு. காழ் - கைமரங்கள்.

நரிந்த மாடங் [1] காவலன் குறுக
(தோழர் விலக்கல்)
10 ஆரளைச் செறிந்த வருந்தின நாகத்துப்
பேரழற் காணிய பேதை மாந்தர்
வாயின் மருங்கிற் றீயெரி கொளீஇயது
செயிர்படு பொழுதிற் செம்முக நின்றதும்
உயிரொழிந் தறுபோ தாகி வேண்டார்
15 அடங்கா ரடக்கிய வண்ணான் மற்றுநின்
கடுஞ்சினம் பேணுக் கன்றிய மன்னர்
[2] கறுவு வாயிற் குறுதி யாக
இகப்ப வெண்ணுத லேத முடைத்தே
ஆகிய தறியு மரும்பொருட் சூழ்ச்சி
20 யூகியி னல்லதை யுதயண குமரன்
[3] உள்ள மிலனென வெள்ளைமை கலந்த
புறத்தோ ருரைக்கும் புன்சொன் மாற்றம்
அகத்தோர்க் கென்று [4] மகஞ்சுட லாணு
தாங்கன மந்திலை யறிந்துமனங் கவலா
25 தோங்கிய பெருங்குலத் தாங்குதல் கடனுப்

---

10. அளை - புற்று.

11. அழல் - கோபம். காணிய - காணும்பொருட்டு.

12 வாயில் மருங்கின் - புற்றின் வாயிலில்.

12 - 3. அது செயிர் படு பொழுதில் - அப்பாம்பு கோபமுற்று வந்தபொழுது. செம்முகம் - அதன் முகத்தின் நேரே.

14. வேண்டாராகி. 15 அண்ணல் : விளி.

16. பேணு - மதியாமல். கன்றிய - வயிரங்கொண்ட.

17. கறுவுவாயிற்கு - கோபிக்கும் வழிக்கு.

18. இகப்ப - உயிரை விடுதற்கு.

21. உள்ளம் - ஊக்கம். வெள்ளைமை - அறிவின்மை.

22. புறத்தோர் - அயலார். 23. அகத்தோர்க்கு - எமக்கு.

24. நீ அறிந்து.

பி - ம். 1 காமன். 2 கருமவாயிற். 3 உள்ளமில்லென. மருஞ்சுட.

பூண்டனை யாகுதல் பொருண்மற் றிதுவென
மாண்ட தோழர் மாற்றுவனர் விலக்கக்

(உதயணன் வாசவதத்தையின் உடம்பைக் காணவிரும்பல்)

காலங் கலக்கக் கலக்கமொ டோராஅய்
ஞால முழுது நவைக்குற் றெழினும்
30 ஊர்திரை யுடைய வொலிகெழு முந்நீர்
ஆழி யிறத்தல் செல்லா தாங்குத்
தோழரை யிகவாத் தொடுகழற் குருசில்
சூழ்வளை முன்கைச் சுடர்க்குழை மாதர்
மழைக்கா லன்ன மணியிருங் கூந்தல்
35 அழற்புகை நுழை வஞ்சவன னடுங்கி
மணிக்கை நெடுவரை மாமலைச் சாரற்
புனத்திப் புதைப்பப் போக்கிடங் காணா
தளைச்செறி மஞ்ஞையி னஞ்சுவன ளிம்மி
இன்னுயி ரன்ன வென்வயி [1] னினைஇத்
40 தன்னுயிர் வைத்த மின்னுறழ் சாயல்
உடப்புச் சட்டக முண்டெனிற் காண்கம்
கடுப்பழ லவித்துக் காட்டுமின் விரைந்தெனக்
கரிப்பிணங் காணார் காவல னென்னும்
மொழிப்பல காட்டவு மொழியா னழிய

---

25 - 7. தாங்குதலைக் கடமையாகப் பூணுதல் காரியமென்று தோழர்கள் விலக்க.

31. ஆழி - கரை. [உவமை.

30 - 32. தோழர்க்குக் கரையும் உதயணனுக்குக் கடலும்

34. "கூந்தல் வனப்பிற் பெயலூழ" கார். 13.

36. கை - பக்கம். 38. அளை - குகை.

39. என் வயின் நினைஇ - என்னை நினைந்து.

40. உயிர்வைத்த - உயிரை நீக்கிய.

41. உடப்புச் சட்டகம் - உடம்பின் வடிவு.

42. கடுப்பு - விரைவு; வெம்மையுமாம்.

43. கரிப்பிணம் - கரிதலையுடைய பிணத்தை.

44. காட்டவும் - தோழர் எடுத்துக் கூறவும்.

பி - ம். 1 னினைஇத்.

(உருமண்ணுவாவின் செயல்)

45 முன்னைய ராதலின் முதற்பெருந் தேவி
இன்னுயி ரிகப்ப விடாஅ ரிவரென
மன்ன குமரன் மதித்தன னாயின்
எண்ணிய சூழ்ச்சிக் கிடையூ றுமெனத்
தவலரும் பெரும்பொரு ளிலைமையி னெண்ணி
50 உலைவில் பெரும்புக ழுருமண் ணுவாவிரைந்
தாய்புக ழண்ணல் மேயது விரும்பி
நீள்புடை யிழிந்துக ஞாயி லொதுங்கிக்
கோயில் வட்டத் தாய்கலங் குயின்ற
பள்ளிப் பேரறை யுள்ளகம் புக்காங்
55 கழிவுறு சுருங்கை வழிமுதன் மறைஇ
விம்முறு துயரமொடு விளிந்துயிர் வைத்த
[1] கும்மனத் தாளர் குறைப்பிணங் காட்டித்
தாயுந் தையலுந் தீயுண விளிந்தமை
மாய மன்றென மன்னனைத் தேற்றி
60 மணியு முத்து மணியு மிழந்துதிரந்
தாரக் கம்மஞ் சாரவீற் றிருந்து
கொள்கைக் கட்டழ லுள்ளுற மூட்டி
மாசுவினை கழித்த மாதவர் போலத்
தீயகத் திலங்கித் திறல்விடு கதிரொளி
65 சேடுறக் கிடந்த செம்பொற் செய்கலம்

49. பெரும்பொருள் - பெரிய காரியம்.
51. அண்ணல் மேயது - உதயணன் விரும்பியதை.
52. ஞாயில் - மதிற்சூட்டில்.
55. சுருங்கையின் வழியை மறைத்து.
57. கும்மனத்தாளர் - வஞ்ச மனத்தாருடைய; உ. 17 : 69 - 71.
58. சாங்கியத்தாயும் வாசவதத்தையும் நெருப்பில் வெந்து இறந்தது. 59. மாயமன்று - பொய்யன்று.
60 அணி - அழகு. 61. கம்மம் - தொழில்.
62. கொள்கை - விரதம். 65. பொன்னணியை; உ. 17 : 72 - 3.
62 - 5. "சுடச்சுடரும் பொன்போ லொளிவிடுந் துன்பஞ், சுடச்சுட நோற்கிற் பவர்க்கு" குறள், 267.

பி - ம். [1] கும்மணத்தாளர்.

பொன்னணி மார்பன் முன்னணை விடுதலின்

(உதயணன் வாசவதத்தையின் பொன்னரிமாலை
முதலியவற்றை நோக்கிப் புலம்பல்)

(பொன்னரிமாலை)

ஒன்றெசெங் தாமரை யொள்ளித ழன்ன
பண்கெழு விரலிற் பன்முறை தொகுத்து
நான மண்ணி நீனிறங் கொண்டவை
70 விரித்துந் தொகுத்தும் வகுத்தும் வாரியும்
உளர்ந்து முறிய மளந்து கூட் டமைத்த
அம்புகை கழுமிட அணிமா [1]ராட்டம்
வெப்புகை சூழ்ந்து மேலெரி யூர
பிரித்தது நோக்கி யொழிந்தனை யாதலின்
75 நன்னுதல் மாதர் பின்னிருங் கூந்தற்
பொன்னரி மாலாய் பொருளிலை யென்றும்

(நெற்றிப் பட்டம்)

தொடியு மலருங் கொழுந்துங் குலாஅய்
வடிவுபெற வகுத்த மயிர்வினைச் சிப்பத்து
வத்தவ மகடூஉச் சித்திரத் தியற்றிய
80 பல்வினைப் பரிசரத் தெல்லை யாகி
மதிப்புறங் கவைஇய வானவிற் போல
நுதற்புறங் கவவி மிகச்சுடர்ந் திலங்கும்
சிறப்புடைப் பட்டஞ் சிறியோர் போல

---

68. பண் - யாழ் ; ஆகுபெயர்.
69. நீனிறங்கொண்டவை - கூந்தல்.
72. மாராட்டம் - ஒரு தேயம் ; இங்கே அத்தேயத்தாருடைய அலங்காரத்திற்கு ஆகுபெயர்.
76. பொன்னரிமாலை : க. 40 : 40, அடிக். பொருளிலை - நன்மை [யில்லாய்.
78. சிப்பம் - சிற்பம்.
79. வத்தவ மகடூஉ - வத்தவநாட்டுப் பணிப்பெண் ; வண்ண வேலைகளிலும் சித்திரவேலைகளிலும் வத்தவநாட்டு வினைஞர் புகழ் பெற்றவர் ; “ வத்த நாட்டு வண்ணக் கம்மரும் ” க. 58 : 44.
81. கவைஇய - வளைந்த. 83. பட்டம்: விளி.
81 - 3. பல நிறமுள்ள பட்டத்திற்கு வானவில் உவமம்.

பி - ம். 1 ஞாட்டம்.

இறப்புங் காலத்துந் துறப்புத்தொழி லுணிந்த
85 வன்கண்மை பெரிதெனத் தன்கணு நோக்கான்
பட்டப் பேரணி விட்டெறிந் திரங்கியும்

(திலகம்)

பனிநாட் புன்னியத் தணிபெறு திங்கள்
அந்தியுண் முளைத்த வெண்பிறை போலச்
செந்தீச் சிறுநுதன் மூழ்கத் தீந்து
90 நிலமிசை மருங்கின் வீழ்ந்தனை யோவெனத்
திலக நோக்கிப் பல்பா ராட்டியும்

(காதணி)

வெண்மதிக் கைப்புடை வியாழம் போல
நுண்மதி நிகழ வூச லாடிச்
சீர்கெழு திருமுகத் தேரணி யாகிய
95 வார்நலக் காதினுள் வனப்புவீற் றிருந்த
நன்பொற் குழைநீ நன்னுதன் மாதரை
அன்பிற் கரந்தே யகன்றனை யோவெனப்
போதணி கூந்தற் பொற்பூம் பாவை
காதணி கலத்தொடு கவன்றனள் கலங்கியும்

(கண்கள்)

100 பொய்கையிற் றீர்ந்து புன்கண் கூர
எவ்வ மாந்த ரெரிவா யுறீஇய
பொருங்கயல் போல வருந்துபு மிளிராக்
கனைகண் பெறாஅக் கலக்க நோக்கமொடு

---

85. தன் கண்ணுலும்.
87. திங்கள் - மாதம்.
88 - 9. செந்தீக்கு அந்தியும், நெற்றிக்குப் பிறையும் உவமை.
91. திலகம் - ஒருவகை நெற்றிப் பட்டம்; கலி. ௬௨ : 35, ௬எ : [11.
96. குழை - குண்டலம்; விளி.
92 - 6. "மண்டல நிறைந்த மாசின் மதிப்புடை வியாழம் போன் றோர், குண்டல மிலங்க நின்ற கொடி" (சீவக. 618) என்பதில் இங்கே யுள்ள உவமை காணப்படுகின்றது. [சேர்த்த.
101. எவ்வமாந்தர் - துன்பத்தைச செய்யும் மனிதர். உறீஇய -
102. மிளிரா - பிறழ்ந்து.

தளையவிழ்ந் தகன்ற தாமரை நெடுங்கண்
105 அனையற வருளா யாகிக் கவிழ்ந்து
செவ்வழல் புகைத்திடச் சிதைந்தனை யோவென
அவ்விழிக் கிரங்கி வெவ்வழ லுயிர்த்தும்

(நகில்கள்)

செஞ்சாந்து வரித்த சின்மெல் லாகத்
தஞ்சாய் மருங்குல் வருந்த வடிபரந்து
110 வீங்குபு செறிந்த வெங்கண் வனமுலை
பூங்கொடிப் பொற்கலம் போழ்ந்துவடுப் பொறிப்ப
மகிழ்ச்சி யெய்தி மனமொன் றாகிய
புணர்ச்சிக் காலத்து மதர்த்துமுகஞ் சிவப்ப
நோய்கூர்ந் தழியு நீயே யளியை
115 வேக வெவ்வழல் வெப்புகை யணிந்த
பொங்கழற் போர்வை போர்த்ததோ வெனவும்

(பலவகை ஆபரணங்கள்)

இலைப்பெரும் பூணு மிதயவா சனையும்
நலப்பெருங் களிகையு நன்முத் தாரமும்
பன்மணிப் பூணுஞ் சின்மணித் தாலியும்
120 முத்தணி வடமுஞ் சித்திர வுத்தியும்
நாணுந் தொடரு மேனைய பிறவும்
மெய்பெறப் புனைந்து கைவல் கம்மியச்
செய்கையிற் குயிற்றிய சித்திரங் கொளீஇப்
பூணணி யுள்ளு மாணணி யுடையவை
125 ஆகக் கேற்ப வணிகம் வாராய்
வேகத் தானை வேந்தன் மகளே
தனித்தா யியங்கலுந் தாங்கினை யோவெனப்
பனித்தார் மார்பன் பலபா ராட்டியும்

---

104. நெடுங்கண் : விளி. 108. வரித்த - கோலஞ்செய்த.
110. வனமுலை : விளி. 111. கொடியென்னும் பொன்னணி.
114. அளியை - அளிக்கத்தக்காய்.
117. இதயவாசனை - ஹாராபரணம்.
118. களிகை - கழுத்தணி; க. 41 : 82 ; ட. 22 : 222.
120. உத்தி - சீதேவியென்னும் அணி.
121. தொடர் - சங்கிலி. 125. அணிகம் - அணிவேம்.

(தோளணிகள்)

ஓங்குவரை மருங்கி னொளிபெற நிவந்த
130 காம்பொசிந் தன்ன கவினை யாகிய
நலங்கிளர் தடந்தோ ளணையுறச் சேர்ந்
தலங்குமலர்த் தாமரை யகவயி னமர்ந்த
திருமக ளிருக்கை யுருவுபடக் குயிலாக்
காமுறப் புனைந்த தாம முளப்படப்
35 பொறிவரி யொழுக்கம் போலு மற்றிம்
மறியிலைக் கம்மமொடு மகரங் கவ்விக்
கொடியொடு துளங்கி யடிபெற வகுத்த
அருமணிக் கடகமொ டங்குலி யழியச்
செற்றுபு சிறந்த சிறப்புமுள் ளாது
140 கற்றதெ னமர்ந்த கலப்பின வாகியும்
பற்றுவிட் டகறல் பண்போ வெனவும்

(இடையணி முதலியன)

பவழக் காசொடு பன்மணி விரைஇத்
திகழக் கோத்த செம்பொற் பாண்டில்
கைவினைக் கொளுவிற் செய்துநலங் குயின்ற
145 எண்ணாற் காழ்நிரை கண்ணுமிழ்ந் திலங்க
உருவக் கோலமொ டொட்குவீற றிருந்த
அரவுப்பை யன்ன வைதேர் தல்குல்
புகைக்கொடிப் புதைதேள் பொருக்கென வூட்டி
அழற்கொடி யரத்த மறைத்தவோ வெனவும்
150 மணிக்க ணன்ன மணிதகு பெடையைப்

---

130. காம்பு - மூங்கில். கவினை - அழகையுடையாய்.
131. தோள்: விளி. 133. குயிலா - குயின்று.
135. பொறிவரி ஒழுக்கம் - வண்டினொழுக்கம்.
136. இலைக்கம்மம் - இலை வடிவாகிய தொழில். மகரம் - ஓரணி; மகரவாயென வழங்கும்; சீவக. 170. 138. அங்குலி - மோதிரம்.
140. கற்றது என் - கற்றது யாது.
142. விரைஇ - கலந்து.
143. பாண்டில் - வட்டக்காசு. 144. கொளு - மூட்டுவாய்.
145. எண்ணாற் காழ்நிரை - விரிசிகையென்னும் மேகலை.
142 - 5. கலி. அ௬: 3 - 5. 150. அன்னம் - அன்னச்சேவல்.

பயிலிதழ்ப் பனிநீர்ப் பக்க நீக்கி
வெயில்கெழு வெள்ளிடை விட்டுசி ஞங்கு
மணியரிக் கிண்கிணி சிலம்பொடு மிழற்ற

..........................................................

நின்னணி காண்கஞ் சிறிது சிறிதுலாஅய்

155 மராஅந் துணரு மாவின் றளிரும்
குராஅம் பாவையுங் கொங்கவிழ் முல்லையும்
பிண்டித் தளிரும் பிறவு மின்னவை
கொண்டியான் வந்தேன் கொள்குவை யாயின்
வண்டிமிர் கோதாய் வாரா யெனவும்

(முன்னிகழ்ச்சிகளை நினைத்துப் புலம்பல்)

160 அணிவரைச் சார லருவி யாடியும்
பணிமலர் கொய்தும் பாவை புனைந்தும்
திருவிழை மகளிரொ டொருவழி வருவோய்
பருவின் மாதவன் மாசின் மடமகள்
விரிசிகை வேண்ட வேறுபடு வனப்பிற்

165 றாமந் தொடுக்கியான் கொடுத்தது தவறெனக்
காம வேகங் கடுத்த கலப்பிடை
முகத்தே வந்தோர் முசுக்கலை தோன்ற
அகத்தே நடுங்கி யழற்பட வெய்துயிர்த்
தஞ்சி யடைந்த வஞ்சி றெமொழிப்

170 பஞ்சி மெல்லடிப் பாவாய் பரந்த
கடுந்திக் கஞ்சாது கரந்தியோ வெனவும்
அங்கண் மாநிலத் தகன்றுயிர் வாழ்வோர்
வன்க ணாள ரென்றுபண் டுரைப்போய்
நின்க ணட்டொழி நிற்ப வென்கட்

175 புன்க ணோக்காது போதியோ வெனவும்

---

155. மராந்துணர் - செங்கடம்பின் பூங்கொத்து.

156. குராம்பாவை - குரவம்பூ.

166. காமவேகம் : உ. 16 : 89; அடிக். கடுத்த - மிக்க.

167 - 71. முசுக்கலையால் ஊடல் தீர்ந்தமை ; உ. 16 : 109 - 18.

172. அகன்று - பிரிந்து.

இளைப்புறு ஞமலி நலத்தகு நாவிற்
செம்மையு மென்மையுஞ் சிறந்துவனப் பெய்தி
[1] அம்மை முன்னு மணிபெறப் பிணங்கி
இலைபடக் குயிற்றிய வெழிலொளிக் கம்மத்துத்
180 தலைவிரற் சுற்றுந் தாதணி வளையமும்
வட்ட வாழியுங் கட்டுவட விணையும்
மகர வாயொடு நகைபெறப் புணர்ந்த
விரலணி கவ்வி நிரலொளி யெய்திப்
பூவடர் மிதிப்பினும் புகைந்தழ லுறாஉம்
185 சேவடிக் கேற்ற செம்பொற் கிண்கிணி
பாடகக் குரலொடு பரடுபிறழ்ந் தாற்றக்
கழனிக் [2] கண்பின் காயெனத் திரண்ட
அழகணி சிறுதுடை யசைய வொதுங்கி
ஆயத் திறுதி யணிநடை மடப்பிடி
190 கானத் தசைந்து தானத்திற் றளர்ந்தபிற்
கரிப்புற் பதுக்கையுங் கடுநுனைப் பரலும்
எரிப்புள் ளுறீஇ யெஃகி னியலவும்
எற்கா முறலி னேத மஞ்சிக்
கற்கால் பயின்ற காலவி சில்லதர்
195 நடுக்க மெய்தி நடப்பது [3] நயந்தோய்
இடுக்கண் யான்பட வென்னையு நினையாது
கடுப்பழ லகவயிற் காத்தியோ வெனவும்

176 - 7. ஓடி இளைத்த நாயின் நா, பாதங்களுக்கு உவமை; "வருந்துநாய் நாவிற் பெருந்தகு சீறடி" (பொருந. 42) என்பதன் அடிக்குறிப்பைப் பார்க்க.

180 - 82. விரற்சுற்று முதலியன கால்விரலணிகள்.

184. அடர் - இதழ். 185 - 6. உ. 3 : 85.

187. கண்பு - ஒருவகைக் கோரை; "களிறுமாய் செருந்தியொடு கண்பமன் றார்தர" (மதுரை. 172); "கண்புமலி பழனம்" மலைபடு. 454.

189. பிடி - பத்திராபதி. 191. பதுக்கை - கற்குவியல்.

192. எரிப்பு - எரியச் செய்தலை. எஃகு - வேல்.

194. கால் அவி - காற்றடங்கிய. சில்லதர் - சிறிய வழி.

பி - ம். [1] மம்மை. [2] காண்பின். [3] வீயநதோய.

படுகடந் தடர்ந்த பல்களிற் றியானை
இடியுறழ் முரசி னிறைமகன் பணிப்ப
200 நூலமை வீணைக் கோலமை கொளீஇக்
கரணம் [1] பயிற்றினுங் காந்தண் முகிழ்விரல்
அரணங் காணு வஞ்சின போலப்
பயத்தி னீங்காச் சிவப்புள் ளூறுவின
அடைதற் காகா வாரழற் செங்கொடி
205 தொடுதற் [2] காற்றத் துணிந்தவை யெனவும்
வடிக்கண் மாதர் முடிக்கல முதலா
அடிக்கலந் தழீஇ முடிக்கார் மார்பன்
அரற்றியு மயர்ந்து முரற்றியு முயிர்த்தும்
வீழ்ந்து மெழுந்துந் தாழ்ந்துந் தளர்ந்தும்
210 சோர்வொடு செங்கண் டெண்பனி சிதறி
உருவுடை யகலந் தூஉ யுறைத்தரக்
கோல விதும்பிக் குழிப்பட் டாழ
நிலனெடிது [3] நினைந்தழன் றுயங்கு
மாலை மார்பன் மாதரைக் காணு
215 தின்னாமை பிறவும் பன்முறை யரற்றச்

(தோழர் செயல்)

செறுநர் முன்னாச் சீர்மை பன்னெறி
உறுநர் நுந்த வொருபா லொடுங்கித்
தேரும் புரவியும் வார்கவுள் யானையும்
மறப்படை யிளையரொடு திறப்பட வகுத்துப்
220 போரணி கலமும் பொருந்த நல்கி
ஆருணி யரச னடுதிற லாண்டகை
அற்ற மறியாச் செற்றச் செய்கையொடு

---

198. படி - பகை : "படிமதஞ் சாம்ப" பரி. ௬.
199. இறைமகன் - பிரச்சோதனன். 200. கோல் - நரம்பு.
203. உள்ளூறுவின - உள்ளூறுத்தின.
208. உரற்றி - பேரொலி செய்து. 211. உறைத்தர - துளிப்ப.
216. இந்நிகழ்ச்சி பகைவர்முன்பு சிறந்ததன்று; க. 33 : 126.
217. உறுநர் - தோழர்; எழுவாய்.
221. ஆருணியென்பது பாஞ்சாலராசன் பெயர். [யறிந்து.
221 - 2. ஆண்டகை அற்றம் அறியா - உதயணனது சோர்வை

பி - ம். [1] பற்றினுங். [2] காற்றல். [3] நினைந்துடன்றுயங்கு.

மேல்வர வுண்டெனின் மீளி வாட்டிச்
சென்று நெருங்காது பின்றியும் விடாது
225 குன்றக மடுத்துக் கூழவ ணொடுக்கி
யாப்புற நிற்கெனக் காப்புறு பெரும்படை
திசைசெலப் போக்கி யசைவி லாண்மை
மன்பெருங் குமரனை மரபுளிக் காட்டித்
துன்பந் தீரிய தொடங்கினர் துணிந்தென்.

கக—தேவிக்கு விலாவித்தது முற்றிற்று.

223. மீளி - பகைவனது பெருமையை.
225. கூழ் - உணவுப் பொருள்கள்.
229. தீரிய - தீர்த்தற்கு.

## ௨0—சண்பையுள் ஒடுங்கியது.

(காதலின் தற்றத்தை உதயணனுக்குத் துணிவுடையோர் உணர்த்தி விலக்கல்)

துணிவுடை யாளர் துன்னினர் சூழீஇ
அணியுடை யண்ணற் கமைந்தமை காட்டிப்
படுதிரைப் பௌவத்துக் கடுவளி கலக்கப்

௨0—சண்பையுள் ஒடுங்கியது.

[சிற்றின்பத்தால் உளதாகும் பெருந்தீங்கைத் தோழர் எடுத்துக்கூறக்கேட்ட உதயணன் ஆறுதலுற்றுப் பிழைத்திருந்ததும், அதனை அறிந்த யூகி முதலிய மூவரும் வேறிடஞ் செல்லக்கருதி ஒருவகை மருந்தையுண்டு தம்மைப் பிறரறியாதபடி வேற்றுவடிவமுற்றுப் புறப்பட்டுப்போய் ஓராச்சிரமத்தை அடைந்து ஆங்குள்ளவனும் உருமண்ணுவாவின் தந்தையுமாகிய ஒரு முனிவனைக்கண்டு நிகழ்ந்தவற்றைக்கூறிச் சிலநாள்இருந்ததும், அங்கே உருமண்ணுவாவாற் காஞ்சனமாலை வந்ததும், அப்பால் நால்வரும் அங்கிருந்து புறப்பட்டுச்சென்று அங்கநாட்டிலுள்ள சண்பை நகரத்தில் மித்திரகாமனென்னும் வணிகனுடைய வீட்டில் யாரும் அறியாதபடி மறைந்திருந்ததும் இதனால் அறியலாகும்.]

1. துணிவுடையாளர் - தோழர் முதலியோர்.
2. அண்ணற்கு - உதயணனுக்கு. 3. கடுவளி - கடுங்காற்று.

பொறியழிந்து கவிழ்ந்த பொருகலத் துய்ந்தோர்
5 நெறிதிரிந் தொரீஇ நீத்துயிர் வழங்காத்
தீவகம் [1] புக்குத் தாவகங் கடுப்பப்
பெருந்துய ருழக்கு மருந்துபசி [2] மூளத்
திண்ணிலை வரைப்பிற் சினைதொறுஞ் செறிந்து
கண்ணணவை யுறாஉங் கனிபல கண்டவை
10 நயவரு நஞ்செனப் பெயர்தெரி வின்மையின்
ஊழுறுத் தக்கனி தாழ்விலர் வாங்கித்
தன்பசிக் குத்தோற் றமுமன்றி
இன்ப நாற்றமு மிசைந்தன விவையென
[3] நச்சபு தெரிந்த நாற்றமுஞ் சுவையும்
15 ஒப்புடை யின்மையி னுயிர்முதற் றுங்க
அமரர் காட்டிய அமுதுநமக் கிவையெனப்
பசிநோய் தீர வயிறலிற் கதுமெனத்
தசைபொழிந் தழற்றித் தபுத்திசி னாங்குத்
தாமரைச் செங்கட் டகைமலி மார்ப
20 காமத் தியற்கையுங் காணுங் காலை
இறுதியி னின்பமொ டினியது போல
உறுபய னின்றி யுடம்புமுதற் புகுத்தலிற்

---

4. பொறி - எந்திரம். கலத்துய்ந்தோர் - கப்பலினின்றும் தப்பினவர்.
5. நெறி திரிந்து - வழி தப்பி.
6. தீவகம் - தீவில். தாவகம் - காட்டுத் தீயை.
9. கண்களை வெறியோடச் செய்யும் ஒளியையுடைய பழங்கள் பலவற்றைக் கண்டு.
10. அக்கனிகள் நஞ்சாகுமென்று தெரியாமையின்.
11. ஊழுறுத்து - முதிர்ந்து; "ஊழுறு தீங்கனி"(அகநா. உ : 2.) தாழ்விலர் - தாமதியாமல்.
12 - 3. தோற்றத்திலும் நாற்றத்திலும் இவைகள் சிறந்தன என்று எண்ணி.
15. உயிர்முதற்றுங்க - பசித்த உயிர்களைப் பாதுகாத்தற்கு.
17. அயிறலின் - அக்கனிகளை அவர்கள் உண்டமையினாலே.
18. தபுத்திசினாங்கு - அவை கொன்றாற்போல.
21. இனியது போலத் தோன்றியென ஒருசொல் வருவிக்க.
22. பயனற்ற விலங்குடம்பு முதலியவற்றிற் புகுத்தலினாலே

பி - ம். 1 புக்குத் தாய்வகங். 2 யாளர். 3 நக்குபு.

பெறுபய மிதுவெனப் பேணார் பெரியோர்
வெற்றித் தானையொடு விசயம் பெருக்கிக்
25 கொற்றம் வேண்டாய் பற்றொடு பழகிய
ஆர்வப் புனலகத் தழுந்துவை யாயின்
ஊர்கடல் வரைப்பி னுருயிர் நடுக்குறீஇப்
பெரும்பே துற்று விளியுமற் றதனாற்
கரும்பேர் கிளவிக் கனங்குழை திறவயிற்
30 கழுமிய காதல் கைவிடல் பொருளெனக்
காமத் துக் கடையுங் காதற் குற்றமும்
ஏமாப் பிலவென வெடுத்துரை நாட்டி
அமைச்சத் [1] தொழிலர் விலக்குபு காட்ட

**(யூகி முதலியோர் ஒரு மலைச்சாரலுக்குச் செல்லுதல்)**

இருப்ப மொடுங்கிய வியல்பின ராகிய
35 அண்ண னிலைமை திண்ணிதி னறிந்து
வண்ணக் கோதை வாசவ தத்தைக்குக்
காதற் கணவ னேத மின்மை
அறியக் கூறி யகல்வது பொருளெனப்

---

23. பெரியோர் காமத்தை உறுதியுடையதாக எண்ணார்.

20 - 23. "நெடுங்காமம், முற்பயக்குஞ் சின்னீர வின்பத்தின் முற்றிழாய், பிற்பயக்கும் பீழை பெரிது" நீதிநெறி. 3.

3 - 23. கப்பல் கவிழ்தலால் உயிர்தப்பி ஒரு தீவிற் பசியொடு சென்றோர் அங்கே காணப்பட்ட விடமயமாகிய கனிகளை அவற்றின் அழகிய தோற்றம் முதலியவற்றால் விரும்பி நுகர அவை கொன்றாற் போல, காமமும் முதலில் இன்பம்போலக் காணப்படினும் பின்பு இழிந்த பிறப்பைக் கொடுத்துப் பெருந்துன்பத்தை விளைவிக்குமென்பது இவ்வடிகளாற் போந்த கருத்து.

25. கொற்றம் வேண்டாய் - அரசவுரிமையை வேண்டாயாகி. பற்று - காதல்.

26. ஆர்வப்புனலகத்து - ஆசையாகிய வெள்ளத்தில்.

27. நடுக்குறீஇ - நடுங்கி. 28. பெரும்பேதுற்று - மிகமயங்கி.

30. கழுமிய - மிக்க. 31. கடையும் - தாழ்வும்.

32. ஏமாப்பில - துன்பந்தருவன; பாதுகாப்பிலவென்றுமாம்.

34. இருப்பமொடுங்கிய - தாழ்வு நீங்கிய; துக்கம் நீங்கிய.

38. பொருள் - காரியமாகும். என - என்று யூகி சொல்ல.

பி - ம். [1] தோழர்.

பொறியமைத் தியற்றிய பொய்க்கிலம் போகி
40 வேண்டிய வளவிற் காண்டகக் கூட்டிக்
கரந்துறை மெய்து மரும்பெறல் யோகம்
யாவரு மறியாத் தன்மைத் தாக
மூவரு முண்டு வேறுநிற மெய்தி
அந்தண வுருவொடு சந்தனச் சாரற்
45 பெருவரை யடுக்கத் தருமைத் தாகிய
கல்சூழ் புல்லதர் மெல்லடி யொதுங்கிப்
பிரிவுதலைக் கொண்ட வெரிபுரை வெந்நோய்
தலைமை நீரிற் றன்னெனத் தெளித்து
முலைமுதற் கொழுந னிலைபெற வேண்டும்
50 உள்ள வூர்தி யூக்கப் பூட்டக்
கள்ளக் காத லுங்கின ளாகி
இடிப்புவினை விச்சையி னிடுக்கட் பட்ட
மடிப்புமணி நாகர் மடமகள் போல
புக்க நெறியிற் போதுநயினிப் புண்டு
55 வேண்டுவயிற் சென்ற காலை யாண்டை

(ஓர் ஆச்சிரமத்தின் வருணனை)

தண்கோ லல்லது வெங்கோல் புகாஅச்
செங்கோ லாளன் சேதியம் பெருமலைத்
தாண்முதற் றழீஇ நாண்மதுக் கமழும்
கற்சுனை நிலமுங் கணிவாய் வேங்கையும்

---

41. யோகம் - மருந்து. 45. அடுக்கம் - பக்கமலை.

46. புல்லதர் - புல்பரந்த வழி. 47. நோய் - விரகம்.

48. தலைமை நீரின் - தலைமையாகிய நீரினாலே. தெளித்து - தெளியச்செய்து ; நீக்கி.

50. மனமாகிய வண்டியில் ஊக்கமாகிய எருதை. [தால்.

52. இடிப்புவினை விச்சையின் - கட்டுந்தொழிலையுடைய மந்திரத்

57. சேதியம்பெருமலை - சிறுலயத்தையுடைய பெரியமலை.

58. தாண்முதல் - அடியிடத்தை.

59. கணிவாய் வேங்கை - கணித் தொழில் வாய்த்த வேங்கை மரம் ; இம்மரம் குறிஞ்சிநிலமாக்கள் மணஞ்செய்து கொள்ளுதற்குரிய நல்லநாளில் மலரும் ; "கணிவாய் வேங்கை" (நற். ௩௭௩); "இள வேங்கை காருரைப்ப" (திணைமா. 18) ; "கணிவேங்கை நன்னாளே நாடி மலர்தலால்" பழ. 120.

60 நற்கினை நறவமு நாகமு நந்தியும்
பருவ மன்றியும் பயங்கொடுப் பழூஅப்
பலவு மாவுங் குலைவளர் வாழையும்
இருங்கனி நாவலு மிளமா துளமும்
ஒருங்குடன் கஞலி யுள்ளம் புகற்றும்
65 மாகின் முனிவரொடு மகளிர் குழீஇயதோர்
ஆகில் பள்ளி யறிந்துமுன் னொடி

**(யூகி முதலிய மூவரும் முனிவனாச்சிரமத்தில் இருத்தல்)**

மற்றத னகவயிற றெற்றெனத் தெரியும்
உருமண் ணுவாவின் பெருமுது குரவன்
அவமில் சூழ்ச்சித் தவமுது மகனொடு
70 கருமங் கூறிக் கண்ணுற் றுப் பிரியார்
அணித்துஞ் சேய்த்து மன்றி யமைவுற
மணிப்பூண் மாதரு மனம்புரி தோழனும்
காதற் செவிலியுங் கரந்தவ ணொடுங்கி
மாதவர்த் தெரீஇ மரீஇ யொழுகப்

**(சாங்கியத்தாயின் செயல்)**

75 பள்ளியும் பதியு மலையுஞ் சேணிடத்
துள்ளவை யுரைத்துத் தள்ளாத் தவநெறி
அற்றந் தீர வுற்றுப்பிரிந் தொழுகிய
உருவுடை முதுமக ளொருவயிற் றியன்றமை

---

61 - 2. அகாலத்திலும் பயனளித்தலொழியாத பலா முதலிய மூன்று மரங்களும்; "கால மன்றியு மரம்பயங் கொடுத்தலின்" (மலை படு. 134); "கால மன்றியு மரம்பயம் பகரும்" (புறநா. ககசு) என்ற விடத்தும் மலைவளம் இவ்வாறு கூறப்பட்டிருத்தல் காண்க. கொடுப்பு - கொடுத்தல்.

63. இருங்கனி - பெரியகனி; கரியகனியுமாம்.

64. கஞலி - நெருங்கி. புகற்றும் - விரும்பச்செய்யும்.

66. பள்ளி - ஆச்சிரமம். 64 - 6. புகற்றும் பள்ளியென்க.

68 - 70. அப்பள்ளியில் தவஞ்செய்து கொண்டிருக்கும் உருமண்ணுவாவின் தந்தையாகிய முனிவனை அடைந்து காரியத்தைச் சொல்லி அவனைப் பிரியாராகி; உ. 20 : 103 - 4; ௬. 9 : 23.

72. மாதர் - வாசவதத்தை. தோழன் - யூகி.

73. செவிலி - சாங்கியத்தாய்.

75 - 6. மிக்க தூரத்திலுள்ளனவாகிய பள்ளி முதலியவற்றைத் தம் இடமாகக் கூறி.

நீப்பிடந் தோறும் யாப்புற வறிவுறீஇ
80 நாட்ட வொழுக்கொடு நன்னுத லிவளை
வெட்டோன் விட்டுக் காட்டக நீந்தித்
துன்னினிர்க் குமரித் தெண்டுறை யாடிய
போயினெ னென்னும் பொய்ம்மொழி பொத்தித்
தீவினை யாளரைத் தெளியக் கூறி
85 வாய்மொழி யாக வலித்தனர் வழங்கி
மறுவின் மன்னற் குறுதி வேண்டித்
தண்டழை மகளொடு தலைநின் றொழுகக்

(காஞ்சனமாலையின் வரவு)

கண்டவி றுணர்ந்த காவலன் மகளொடு
திருந்தொடைக் காஞ்சனை யுயிர்த்துணை நில்லாச்
90 செல்லல் நோக்கிச் செயற்பாற் றிதுவென
ஒல்லா நண்பி னுருமண் ணுவாவவட்
கொண்டனன் வந்து கோமகட் காட்டிக்
கருமக் காரண மவள்வயிற் பேசி
விண்டலர் கழுநீர் வென்ற கண்ணியொடு
95 தலைப்படுத் தனனே தானவட் போகி
வண்டுளை மைம்பால் வயங்கிழை மாதரை

---

76 - 9. தவநெறியை அற்றந்தீர உற்று, தம்மைப் பிரிந்துசென்ற ஒரு முதியவள் வயிற்றில் தாம் மூவரும் பிறந்ததாகப் பிரிந்துசென்ற இடங்களிலெல்லாம் அறிவுறுத்தி; நீப்பிடந்தோறும் - பள்ளிதோறு மென்றுமாம்.

80. நாட்டவொழுக்கு - தேசாசாரம்.

82. ஆடிய - ஆடுதற்கு. 83. பொத்தி - மறைத்து.

84. தீவினையாளர் - அக்கினி காரியஞ் செய்வோர்.

85. வாய்மொழியாக - மெய்ம்மொழிபோல.

86. மன்னற்கு - உதயணனுக்கு.

87. தழைமகளொடு - தழையை உடையாகக்கொண்ட முனிவர் மகளொடு.

89 - 90. காஞ்சனையின் பெருந்துயரை நோக்கி.

91. அவள் - அக்காஞ்சனமாலையை.

93. கருமக்காரணம் - அச்செயலின் காரணத்தை.

95. தலைப்படுத்தனன் - சேர்க்க. தான் - காஞ்சனமாலை.

ஆற்றுவித் தோம்பிப் போற்றுபு கழீஇ
நீங்கல் செல்லா நெறிமையி னோங்கி

(யூகி முதலிய நால்வரும் சண்பை நகருக்குச் செல்லுதல்)

யாங்கினி திருத்துமென் றறிவினிற் சூழ்ந்து
100 பற்றா ராயினு முற்றா ராயினும்
ஒற்றுவ ருளரெனி னற்றந் தருமென
மற்றவ ணொடுங்கார் மறைந்தனர் போகி

(சண்பை நகரின் சிறப்பு)

உருமண் ணுவாவின் பெருமுது குரவன்
அவமில் சூழ்ச்சித் தவறி றோழன்
105 பெரும்புனற் கங்கை பெருவளங் கொடுக்கும்
அங்க நன்னாட் [1] டணிபெற விருந்த
தெங்குநிக ரில்ல தெழிற்கிடங் கணிந்தது
பொங்குமலர் நறுந்தார்ப் புனைமுடிப் பொற்கழல்
விச்சா தாருந் தேவ குமாரும்
110 அச்சங் கொள்ள வாடுகொடி நுடங்கிச்
சத்திக் குடத்தொடு தத்துற லோம்பி
விளங்குபு துளங்கும் வென்றித் தாகி
அளந்துவரம் பறியா வரும்படை யடங்கும்
வாயிலும் வனப்பு மேவிவீற் றிருந்து
115 மதிலணி தெருவிற் றாகி மறறோர்க்
கெதிரில் போக மியல்பமை மரபொடு

---

99. யாஙகு இனிது இருத்தும் - இனி எவவிடத்தே இனிமை யுடன் இருப்பேம்.

100. பற்றார் - பகைவர். உற்றார் - உறவினர்.

101. ஒற்றுவர் உளரெனின் - ஒற்றியுணர்வார் உள்ளாராயின். அற்றம் - சோர்வை.

102. அவண் ஒடுங்கார் - அங்கே தங்காராய்.

104. தோழனென்றது விசயவரனை.

103 - 4.=68 - 9. குரவனுடைய தோழன். 107. கிடங்கு - அகழி.

111. சத்திக்குடத்தொடு - சூலம் நாட்டிய குடத்தொடு.

113. படை - காவற்படை.　　108 - 14. நகர்வாயில்.

115. மற்றோர்க்கு - மற்ற அரசர்க்கு.

116. எதிரில் - நேர்படுதலில்லாத. மரபொடு கூடியென ஒரு சொல் வருவிக்க.

பி - ம். [1] டணிபெற.

மூன்றாவது

# மகத காண்டம்.

## க—யாத்திரை போகியது.

ஆங்கினி திருந்த காலை யிங்கினி
வேறுபடக் கடந்த வேந்துசுடர் நெடுவேல்
உதயண னிலைமை யிதுவென வுரைப்பேன்
(உதயணன் உட்கோள்)
பழனப் படப்பைப் பாஞ்சால ராசன்
5 அழன்மிகு சீற்றத் தாருணி யரசன்
திரியு நெய்யு மொருவயிற் செல்லிய

---

### ௩—மகத காண்டம்.

இஃது, உதயணன் மகதநாட்டில் இருந்தபொழுது நிகழ்ந்த வரலாற்றின் தொகுதிகளைக் கூறுவது.

### க—யாத்திரை போகியது.

[பகையை வெல்லுதற்கு முயலவேண்டுமென்று உதயணனைத் தோழர் வற்புறுத்தியதும், இறந்தவர்களை நினைந்து பின்னும் வருந்திய அவனை நோக்கி இறந்தோர்களைப் பண்டை வடிவத்துடன் தருபவரும் இராசகிரிய நகரத்தில் இருப்பவருமாகிய ஒரு முனிவரைச் சார்ந்து இரப்பின் அவரால் தேவி முதலியோரை மீட்டும் பெறுதல்கூடுமென்று இசைச்சன் சொல்லியதும், அப்பால் உதயணன் முதலியோரும் அறிவு முதலியவற்றிற் சிறந்த நூறு வீரர்களும் வேறு வடிவும் செயலு முடையவர்களாய்ப் புறப்பட்டுப் பல இடங்களைக் கடந்து மகதநாட்டின் எல்லையை அடைந்ததும் இதனால் அறியலாதும். இதில் மான் முதலியவற்றைத் தனித்தனியே நோக்கி உதயணன் புலம்புவதாக உள்ளபகுதி மிக இன்பம் பயப்பது.]

1. ஆங்கு - சண்பை நகரில். இருந்த காலை - வாசவதத்தை முதலியோர் இருந்த காலத்தில்.

இனி (1) உதயணன் நிலைமை உரைப்பேன் (3.)

5. ஆருணியென்பது பாஞ்சாலராசன் பெயர்.

6. செல்லிய - செல்ல.

னிவிளக் கற்றத் திருள்பரந் தாங்குப்
பாய தொல்சீர்ப் பகைகடிந் தானை
யெயர் தற்றந் திரிக்கட் காலை
10 அன்றவை யறிந்து தொன்றுவழி வந்த
குலப்பகை யாகிய வலித்துமேல் வந்து
நன்னகர் வௌவு மின்றுச் சூழ்ச்சியன்
பன்வகை யறிந்த நன்பொரு ளாளன்
பெரும்படைத் தானைப் பிரச்சோ தனன்றன்
15 அரும்படை யழியா வாற்றலிற் போந்தவன்
மடமகட் கொண்ட விடனறி சூழ்ச்சி
யூகி புணர்ந்தனன் வகையா 1 னிவனெனச்
சாயுபுத் துறந்த வலிப்பின னாகித்
தீயகங் கழுமிய கோயில் வெவ்வுள்
20 தேவியை யிழந்து துனித்துத் தோலாப்
புல்லென் பாக்கையொடு போயின னுதயணன்

(பாஞ்சாலராசன் உட்கோள்)

இல்லெனக் கெழுபகை யிம்மையி னினியென

---

7. விளக்கு அற்றம் - விளக்கின் அறுதியில். பரந்தாங்கு - பரந்தாற்போல; "விளக்குநெய், தேய்விடத்துச் சென்றிருள் பாய்ந்தாங்கு நல்வினை, தீர்விடத்து நிற்குமாம் தீது" நாலடி. 51.

5 - 7. அருணியாசனுக்கு இருள் உவமம்.

9. எயர் - மிருகாபதியின் முன்னோர்.

9 - 10. காலையை அறிந்து.

11. ஆகிய - ஆக; வளர. வலித்து - துணிந்து.

12. நன்னகர் - கோசம்பி நகரத்தை.

13. நன்பொருளாளனென்றது யூகியை.

15. அழியா - அழித்து.

15 - 6. அவன் மகள் - வாசவதத்தையை.

17. இவன் - பாஞ்சால ராசன்.

18. வலிப்பினன் - துணிவுடையான்.

அதிப் (18) போயினன் உதயணன் (21.)

22. இம்மையில் இனியெனக்குப் பகையில்லையென்று நினைந்து.

பி - ம். 1 னிவணெனச.

மாற்று வேந்தன் மதில்காப் பிகந்துதன்
ஆற்றன் மகிழ்ந்த வந்நிலை யொற்றி

(அமைச்சர் உதயணனுக்குக் கூறல்)

25 [1] மகத மன்னனொடு மகட்கிளை யாகித்
தொகைகொண் டண்டியவன் றொல்படை தழீஇ
ஆதித் துணிவுடை நீதியிற் கரந்த
தம்பியர் கூட வெம்பிய வெகுட்சியின்
ஒடுங்கா மாந்த ருள்ள மஞ்சப்
30 பாடுபெயர்ந் திடிக்கு [2] மேடகம் போல
அகன்றுபெயர்ந் தழிக்கு மரும்பெறற் சூழ்ச்சி
நவின்ற தோழனொடு பயம்பட வலித்து
மதியுடை யமைச்சர் மனந்தெளி வுறீஇப்
புதிதிற் கொண்ட பூக்கவின் வேழம்
35 பணிசெயப் பிணிக்கும் பாகர் போல
நீதி யாள ராதி யாகிய
திறத்திற் காட்டவு மறத்தகை யழுங்கி

---

23. மாற்றுவேந்தன் - பாஞ்சாலராசன்.

24. ஒற்றி - உணர்ந்து.

22 - 4. “ இகழ்ச்சியிற் கெட்டாரை யுள்ளுக தாந்தம், மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து ” குறள், 539.

25. மகதநாட்டரசனுக்கு உறவாகி; மகட்கிளையாகி யென்றது மருகனுதலை. 26. அவன் - மகதமன்னனுடைய.

27. முன்பு, பகையை வெல்லுதற்குரிய காலத்தையும் இடத்தையு மறிந்து மறைந்த. 28. பிங்கல கடகரும் துணையாக.

30. பாடு பெயர்ந்து - இடம்விட்டுப் பெயர்ந்து; பின் சென்று. மேடகம் - ஆட்டுக்கிடாய்.

31. பெறுதற்கரிய ஆலோசனையை.

30 - 31. “ ஊக்க முடையா னொடுக்கம் பொருதகர், தாக்கற்குப் பேருந் தகைத்து ” (குறள், 486.) 32. தோழன் - உருமண்ணுவா.

34. பூக்கவின் - தெறுழ்க் கொடியின் பூவைப்போன்ற புள்ளிகளின் அழகையுடைய; “ களிற்றுமுக வரியிற் றெறுழ்வீ பூப்ப ” புறநா.

35. பணிசெய - ஏவிய தொழில் செய்ய. [ககக : 2.

37. அறத்தகை - உதயணன்.

பி - ம். 1 மத்த. 2 மோதம்.

(உதயணன் இரங்கல்)

முன்னுப காரத்து நன்னயம் பேணித்
தன்னுயிர் கொடுக்குந் தவமுது தாயும்
40 [1] சிறப்பினிற் பெருக்கியும் [2] வறப்பினிற் சுருக்கியும்
உறுதி நோக்கி யுயிர்புரை காதலொ
டாழ்விடத் துதவு மரும்புணை போலத்
தாழ்விடைத் தாங்கிச் சூழ்விடைத் துளங்கா
உள்ள வாற்ற லுறுபுகழ் யூகியும்
45 அள்ளற் றாமரை யகவித ழன்ன
அரிபரந் தகன்ற வரிமலர் நெடுங்கண்
டெரிமலர்க் கோதைத் தேவியு மின்றித்
தருமமு மறத்தகுங் காமமு மிழந்தே
இருநில மருங்கி னிறைமை தாங்கி
50 வாழ்தலி னினிதே வீழ்தலென் றழிந்தே
உரைத்தலின் மெய்ய விரக்கமொ டரற்றவும்

(தோழர் தேற்றல்)

கைதா ரில்லாக் கையறு கவற்சிகண்
புன்மொழி யிச்சை யிலாமய னென்னும்
ஆளவி நெஞ்சத் தந்தண னிருந்த
55 காள வனமும் நாடிப் புக்கெனக்

---

38. முன்னுபகாரம் - முன்பு தன்னைப் பிழைப்பித்தது.
39. தாய் - சாங்கியத்தாய். 42. புணை - தெப்பம்.
43. தாழ்விடை - துன்புற்ற சமயத்தில்.
44. உள்ள ஆற்றலையும் மிக்க புகழையுமுடைய யூகியும்.
41 - 4. "உயிர்புரை யூகியோ டெண்ணி" (நன். மயிலை. சூ. 360, மேற்.) என்பது இக்கோ அறியற்பாலது.
45. அகவிதழ் - உள்ளிதழ். 47. தேவி - வாசவதத்தை.
48. சாங்கியத்தாய் முதலியோரின்மையின், தருமமுதலியவற்றை இழக்கலாயிற்றென்றான்; நிரனிறை. 49. இறைமை - அரசாட்சி.
50. வீழ்தல் - இறத்தல். 51. உம்மை: அசைநிலை.
53. இலாமயன் - முன்பு குறி கூறியவன் போலும்; உ. 13 : 7-8.
54. ஆளவி நெஞ்சம் - ஆண்மையவிந்த நெஞ்சம்.
55. காளவனமும்: உம்மை, உயர்வுசிறப்பு. காளவனம்: 129. புக்கென - புக்கதென்று.
பி - ம். [1] பிறப்பினிற். [2] மறப்பினிற்.

தலன் றன்னையுஞ் சாவற லுமீஇ
பக்க நெஞ்சமொடு மனம்வலித் திருந்துழி

(இசைச்சன் கூற்று)

இசைச்சன் கூறுவ னீங்கிது கேட்கென
விச்சையின் முடியா விழுவினை யில்லெனல்
60 பொய்ச்சொ லென்பர் புன்மை யோரே
அற்ற தாத விற்றுங் கூறுவென்
கற்றதுங் கேட்டதுங் கண்ணு மாந்தர்க்
கொற்கிடத் துதவு முறுவலி யாவது
பொய்ப்பது போலு நம்முதற் றுகப்
65 பற்றொடு பழுகி யற்பழ லழுந்தி
முடிவது நம்மைக் கடிவோ ரில்லை
இல்லை [1] யாதலிற் சொல்லுவ லின்னும்
முடியாக் கரும மாயினு முடியும்
வாயின் முற்றித்து வயங்கா தாயினும்
70 ஈவினும் பழியார் சால்புடை யோரென
மல்லற்றானை மறங்கெழு மன்னவன்
செல்வப் பாவை சென்றினிது பிறந்துழி
இம்மை யாக்கையி னியல்பின ளாகத்
தன்மையிற் றருஉந் தாழாப் பெருவினை
75 உட்குடை விச்சை யொன்றுண் டதனைக்

56. உதயணன் இறத்தலைத் தவிர்த்து.

57. மயக்கம் - இனி யாரிடத்துச் சென்று குறிகேட்போமென்ப தனாலுண்டான மயக்கம். [3 - 4.

58. இசைச்சன் - உதயணனுடைய பார்ப்பனத்தோழன்; ரு. 2 :

61. இற்றும் - இன்னும்; "இற்றுங் கேண்மதி" க. 47 : 253.

62. கண்ணு - கண்ணுக.

64. நம்முதற்றுக - நம்மிடத்தில். [போலும்.

62 - 4. கண்ணுக உதவும் வலியாதல் நம்முதற்றுகப் பொய்ப்பது

65. பற்று - கிடைத்த பொருளின் மேலுள்ள அன்பு. அற்பு அழல் - அன்பாகிய தீயில்; "சொன்னீரவ ளற்பழலுட் சொரிந் தாற்ற" (சீவக. 1072.) 66. முடிவது - முற்றுப்பெறுவதாகும்.

69. முற்றித்து - முடித்து. 70. என - என்று சொல்லி.

72 - 4. = ச. 6 : 65 - 6. 75. உட்கு - அச்சம்.

பி - ம். [1] யாயினுஞ்.

கற்றுநனி நவின்ற கடனறி யந்தணன்
இருந்தினி துறையு மிராச கிரியெனும்
[1] பெருந்தகு வியனகர்ப் புக்கவற் குறுகி
அற்றமில் வழிபா டாற்றி யமைச்சனொடு
80 பூக்குழை யாதனை மீட்டனன் கொண்டு
பெறற்கரு விச்சையுங் கற்றன னெனத்
திறப்படக் கிளவி தெரிந்தவ னுரைப்ப

(உதயணன் கூற்றும் தோழர்செயலும்)

விறற்போ ருதயணன் விரும்புபு விதும்பி
என்னோ யன்னவு முளவோ வென்றலின்
85 கேட்டதன் வழியே பாற்பட நாடி
ஆதி வேதத் தகவயிற் பெரியோர்
ஓதிய வன்றே யுணரக் கூற
இன்னே போது பெருமின் விரைந்தெனப்
பள்ளம் படரும் புனனீர் போலவன்
90 உள்ளம் படர்வழி யுவப்பக் காட்டிக்
கணம்புரி பெரும்படைக் காவ னீக்கித்
துணைப்புரி தோழர் கொண்டனர் போதர
ஆற்றலும் விச்சையு மறிவு மமைந்தோர்
ஏற்றவர் முற்றி [2] வெற்றுநா டாகென

---

78. அவன் - அம்முனிவனை.
79. அமைச்சனொடு - யூகியொடு. 82. அவன் - இசைச்சன்.
83. விரும்புபு விதும்பி - விரும்பி விரைந்து.
84. அன்னவும் - அப்படிப்பட்ட வித்தைகளும். என்றலின் - என்று உதயணன் சொல்லுதலால்.
86. ஆதிவேதத்தகவயின் - முதனூலில்; "ஆதிவேதம் பயந்தோய் நீ" சீவக. 1242.
89. "நீசித் தனியாறு புகமண்டும், பள்ளமெனுந் தகையானே" (கம்ப. குலமுறை. 21); "பள்ளம்புகு புனல்போனெறி படருஞ்சிவ னடியார், றுள்ளம்புகு மருணந்தி" பிரபுலிங்க. குணியசிங்காதன, 1.
91. தம்மைப் பிறரறிந்து கொள்ளாதபடி தம்முடைய பெரிய காவற்படையை நீக்கி.
92. கொண்டனர் போதர - அழைத்துக்கொண்டு செல்லுதற்கு.
94. என - என்று தோழர் சொல்ல.

பி - ம். 1 பெருந்தகு. 2 வேற்றுநாடாகென.

(வேற்று வேடவகை)

95 வெண்ணூற் பூந்துகில் வண்ணங் கொளீஇ
நீலக் கட்டியு மரகதத் தகவையும்
பாசிலைக் கட்டியும் பீதகப் பிண்டமும்
கோல மாகக் கொண்டுகூட் டமைத்துப்
பிடித்துருக் கொளீஇக் கொடித்திரி யோட்டிக்
100 கையமைத் தியற்றிய கலிங்கத் துணியினர்
கொய்யுளைப் புரவி மேற்கொண் டவரிற்
கைவினைக் கம்மங் காண்பினி தாக
வாரமைத் தியற்றிய காலமை செருப்பினர்
செம்பொற் கொட்டைப் பந்தர்க் கொளுவினர்
105 மாத்திரை [1] நுண்கயிற் றுத்திரை யாப்பினர்
உள்கூட் டமைந்த சில்கூட் டல்குலர்
இருமபனை யிளமடல் விரிந்துளர் வெண்டோட்
டர்க்கிடை யாத்த [2]நூற்புரிப் பந்தச்
செந்தோட் டணிமலர் சேர்ந்த வுச்சி
110 அந்தோட் டம்பணை யரக்குவினை யுறீஇய
சித்திரத் திண்கால் வித்தகக் குடையினர்
மரகத மணிக்கை மாசில் பொற்றொடி
உருவுபடச் செறித்த வுரோமக் கொட்டையிற்
செந்தளிர் மராஅத்துப் பைங்காய் பழித்த
115 செண்ணூர் வடிவிற் கண்ணூர் கத்தியர்

95 - 100. வெண்மை முதலிய ஐந்து வண்ணங்களுடைய ஆடை; க. 42 : 102, அடிக். "அஞ்சு வணத்தி னுடை யுடுத்தாள்" என்றார் கம்பரும்; கம்ப. ஊர்தேடு. 79.

102. கைவினைக் கம்மம் - கைத்தொழில். காண்பு - காண்பதற்கு.

104. கொட்டை - குமிழ.

105. மாத்திரை - ஒருவகை மருந்து. மருந்து வைத்துள்ள உறியினர்; மாத்திரை - பெரிய திரைச்சீலையுமாம்.

107 - 11. தொடை.   108. பந்தம் - கட்டு.

110. உறீஇய - உறுத்திய.

113. கொட்டை - உருண்டை வடிவமாகவுள்ளது.   [வடிவு.

115. செண்ணூர்வடிவு செண்ணம ஆர் வடிவு; மிக்க அழகான

பி - ம். 1 நுணங்கெயிற். 2 நூற்பிரிப்பகதிச்.

ஏரில வங்கந் திம்பூ வேலம்
கப்புரப் பளிதமொ டொட்படுத் தியற்றிய
வாசத திரையொடு பாகுநிறைத் தடக்கிய
மாசி லருமணி மடைத்த வாடையர்
120 பட்டுச் சுவேகமொடு பாட்டுப்புற மெழுதிய
கட்டமை சுவடி பற்றிய கையினர்
புரிநூ லணிந்த பொன்வரை மார்பினர்
விரிநூற் கிரந்தம் விளம்பிய நாவினர்
வாச வெள்ளை [1] வரைந்த கழுத்தினர்
125 தேசக் திரிதற் காகிய வணியொடு
வளங்கெழு மாமலை வன்புன் றூளக
நலங்கெழு சிறப்பி னாட்டகம் நீந்திப்
பைந்தொடி யரிவைக்குப் படுகடங் கழீஇய
கண்புரை யந்தணன் காள வனத்தினின்
130 றுதய ஞாயிற்றுத் திசைமுக நோக்கித்
திருமகட் டேடு மொருமையிற் போந்து
கருப்பாச மென்னுங் கானக் கான்யாற்றுப்
பெரும்புன லீத்தம் புணையிற் போகிச்
சேணிடைப் போகிய பின்றை யப்பால்
135 நீணிலைப் படுவிற் பேர்புணை நீந்தி
நொந்துநொந் தழியு நோன்புபுரி யாக்கையர்
அருஞ்சுரக் கவலையு மடவியும் யாறும்
பெருந்தின வீர ரொருங்குடன் போர்வுழி

(உதயணன் மான் முதலியவற்றை நோக்கிப் புலம்பல்)

வென்றடு சிறப்பின் வீணை வித்தகன்
140 ஒன்றிய தேவியை யுள்குவ னாகிச்

116 - 9. ஒருதொடர்.

118. திரை - வெற்றிலை. 119. மடைத்த - பொருத்திய.

120. பட்டுச்சுவேகம் - பட்டாலாகிய உறை.

124. வாசவெள்ளை - வாசச் சந்தனம்.

126 - 7. புன்றூளக நாட்டைக்கடந்து. 129. = 55.

135. படு - மடு.

பி - ம். 1 வரைத்த.

செறிந்த மருங்கிற் றிரிமருப் பிரலை
புறந்தற் காப்பப் புணர்மறி தழீஇய

(மான் பிணை)

மடமா னம்பிணை கண்டு மாதர்
கடைபோழ் நெடுங்கட் காம நோக்கம்
145 உள்ளத் தீர வொள்ளழ லுயிரா
இனத்திற் கெழீஇ யின்ப மகிழ்ச்சியொடு
புனத்திற போகாது புகன்றுவிளை யாடும்
மான்மடப் பிணையே வயங்கழற் பட்ட
தேனேர் கிளவி சென்ற வுலகம்
150 அறிதி யாயின் யாமு மங்கே
குறுகச் செல்கங் கூறு மெனவும்

(மயிற்பெடை)

பணிவரை மருங்கிற் பாறை தோறும்
மணியிரும் பீலி மல்க வுளரி
அரும்பெற விரும்போத் தச்சங் காப்ப
155 மதநடை கற்கு மாமயிற் பேடாய்
சிதர்மலர்க் கூந்தற் செந்தீக் கவர
மயர்வனள் விளிந்தவென் வஞ்சி மருங்குல்
மாறிப் பிறந்துழி மதியி னாடிக்
கூறிற் குற்ற முண்டோ வெனவும்

(ஆண்புறா)

160 வெஞ்சுரஞ் செல்வோர் வினைவழி யஞ்சப்
பஞ்சுர வோசையிற் பையெனப் பயிரும்
வெண்சிறைச் செங்கா லுண்பொறிப் புறவே
நுண்சிறு மருங்கு னுகர்வின் சாயற்

---

141. திரிமருப்பு - முறுக்கி விட்டா லொத்த கொம்பு; இரலை - கலைமான்; " திரிமருப் பிரலையொடு மடமா னுகள " முல்லை. 99.

142. மறி - குட்டி. 145. ஈர - அறுப்ப.

154. போத்து - ஆண்மயில்; " பொறிமயிற் பேடை போத்தொடு புலம்ப " (க. 51 : 58). " மயிற்போத் தார்ந்த வயிற்படை நெடுவேள் " தொல். மரபு. சூ. 41, பேர். மேற்.

156. கூந்தலை முதலில் தீக்கவர. பிறந்துழி-பிறந்துள்ள இடத்தை.

161. பஞ்சுரம் - ஒருவகைப்பண்; இது பாலைக்குரியது; க. 52 : 89.

பாசப் பாண்டிற் [1] பல்கா ழல்குலென்
165 வாசவ தத்தை யுள்வழி யறியின்
ஆசை தீர வவ்வழி யடைகேன்
உணரக் கூறு யாயிற் பெடையொடு
புணர்வு விரும்பல் பொல்லா தெனவும்

(வண்டு)

பசைந்துழிப் பழகல் செல்லாது பற்றுவிட்
170 டுவந்துழித் தவிரா தோடுதல் காமுறும்
இளையோ ருள்ளம் போலத் தளையவிழ்ந்
தூதுமல ரொழியத் தாதுபெற நயந்து
கார்ப்புன மருங்கி னூர்த்தனை திரிதரும்
அஞ்சிறை யறுகாற் செம்பொறி வண்டே
175 எரியுள் விளைந்தவென் வரிவளைப் பணைத்தோள்
வள்ளிதழ்க் கோதை யுள்ளுழி யுணரிற்
கவற்சி வகையிற் பெயர்த்தனை களைஇயர்
அரும்பூங் கோதைப் பூந்தா துண்டவள்
அவிழ்பூங் கூந்தலுண் மகிழ்துயில் வெய்தி
180 நீயு மெவ்வந் தீர யானும்
நல்லிளை வனமுலை புல்லுபு பொருந்த
உய்த்தனை காட்டுதி யாயிற் கைம்மா
றித்துணை யென்பதொன் றில்லென விரங்கியும்

(தென்றல்)

பொங்குமழை தவழும் பொதியின் மீமிசைச்

164. பாண்டில் - வட்டக்காசு.
169. பசைந்துழிப் பழகல் செல்லாது - அன்புள்ள விடத்துப் பழகாது; "பசைந்துழிப் பழகாது" உ. 17 : 43.
170. தவிராது - தங்காமல்.
171. இளையோர் உள்ளம் - பரத்தையருடைய மனம்.
172. தாது - வேறுமலர்களிலுள்ள தேனை. [பார்க்க.
174. அஞ்சிறை - அகத்தே சிறையையுடைய; நன். வி. சூ. 222,
169 - 74 = உ. 16 : 32-6; "நறுந்தா துண்டு நயனில் காலை, வறும்பூத் துறக்கும் வண்டு போல்குவம்" மணி. ௧௮ : 19-20.
176. உள்ளுழி - உள்ளவிடத்தை.
177. கவற்சிவகையின் - பலவகைக் கவலையினின்றும். களைஇயர் - [களைக.
182. உய்த்தனை - கொண்டுவந்து.
184. மழைதவழும் பொதியில்: குறுந். ௮௪ : 3, புறநா. ௧௨௮ : 5.

பி - ம். 1 பல்கால், பல்காசு.

185 சந்தனச் சோலைதொறுந் தலைச்சென் றாடி
அசும்பிவ ரடைகரைப் பசுந்தோ டுளரிச்
சுள்ளிவெண் போது சுரும்புண விரித்து
மணிவாய் நீலத் தணிமுகை யலர்த்தி
ஒண்பூங் காந்த ளொழுக்கிச் சந்தனத்
190 தந்த ணறுமல ரவிழ மலர்த்தி
நறுங்கூ தாளத்து நாண்மல ரளைஇக்
குறுந்தாட் குரவின் குவிமுகை தொலைச்சி
முல்லைப் போதி னுள்ளமிழ் துணாஅப்
பல்பிட வத்துப் பனிமலர் [1] மறுகிப்
195 பொற்றார்க் கொன்றை நற்றாது நயந்து
[2] சாத்துவினைக் கம்மியன் கூட்டுவினை யமைத்துப்
பல்லுறுப் படக்கிய பையகங் கமழ
எல்லுறு மாலை யிமயத் துயர்வரை
அல்குதற் கெழுந்த வந்தண் டென்றல்
200 செவ்வழித் தீந்தொடை சிதைந்தன கிளவியென்
எல்வளைத் தோளியை யெவ்வழி யானும்
நாடிச் சென்றவள் சேடிள வனமுலைக்
குழங்கற் சாந்திடைக் குளித்துவிளை யாடியென்
அழுங்க னெஞ்சத் தயாஅநோய் தீர
205 மயர்வினை [3] மாற்றுதி யாயி னின்மாட்

186. அசும்பு - ஊற்று. தோடு - பூவிதழ். உளரி - அசைத்து.
187. சுள்ளி - மராமரம்.
188. நீலத்து - நீலோற்பலத்தினது.
193. அமிழ்து உணா - இனிய மணத்தை உண்டு.
194. பிடவம் - பிடா.
196. சாத்து வினைக் கம்மியன் - சந்தனச் சாந்து முதலியன அமைக்குந் தொழிலுடையோன்.
197. பையகம் - பையின் உள்ளிடம்.
198. மாலை - மாலைக்காலம்.
199. அல்குதற்கு - தங்குதற்கு. தென்றல் - தென்றலே.
200. செவ்வழி - ஒரு வகைப் பண்.
204. அயாநோய் - வருத்தமாகிய நோயை.
205. மயர்வு - மயக்கம்; எனை மயர்வு மாற்றுதியாயின்.

பி - ம். 1 மருகிப். 2 சாந்துவினைக். 3 யாட்டுதி.

1 டியர்வுள வியற்கை யொழியுமோ வெனவும்
இன்னவை பிறவு மன்னவை கண்டோர்
அவல நெஞ்சமொ டறிவுபிறி தாகத்
தவலருந் தேவியைத் தாணிழைந் தாற்று
210 திறுதி யெண்ணி யிகவா மன்னனை

(உதயணன் முதலியோர்
மகதநாட்டின் எல்லையை அடைதல்)

உறுதி மொழியி னுணர்த்துவன ராகிப்
பல்வகைத் தோழர் படிவ வேடமொடு
செல்வ மகதத் தெல்லை யெய்தி
ஒருவழிப் பழகல் செல்லா துருவுகரந்து
215 பெருவழி முன்னினர் பெருந்தகைக் கொண்டென்.

க—யாத்திரை போகியது முற்றிற்று.

210. இறுதி - வாசவதத்தையின் மரணத்தை.
212. படிவவேடம் - வேறுவேறான வேடம்.
213. மகதத்து - மகதநாட்டினது. 214. கரந்து - மறைந்து.
215. பெருவழி - விசாலமான வழி; சாலையென்றும் வழங்கும்.
பி - ம். 1 டியர்புனத்தியற்கை, யெர்புன.

## உ—மகதநாடு புக்கது.

(தோழர்செயல்)

பெருவழி முன்னிப் பெருந்தகை வேந்தனை
உருமண் ணுவாவும் வயந்தக குமரனும்
அருமறை நாவி னந்த ணாளன்
மயக்கமில் கேள்வி யிசைச்சனு மென்றிக்
5 கடனறி தோழர் காவல் போற்றி
மடநடை மாதர் மாறிப் பிறந்துழி

உ—மகதநாடு புக்கது.

[உருமண்ணுவாமுதலியோர், மிகவிரிவானதும் பலவகை வளங்களையுடையதுமாகிய மகதநாட்டினுள் உதயணனுடன் புதுந்தது இதனால் அறியலாகும்.]

4. இசைச்சன் : ந. 1 : 58.
5. கடன் - தம்முடைய கடமைகளை. காவல்போற்றி - பாது [காத்து.

மீட்கும் வேட்கையொடு சேட்புலம் போகி
விரிகதிர்த் திங்கள் வெண்குடை யாக
ஒருவயிற் கவித்த லுற்ற வேந்தற்
10 கருமை யமைச்சர் பெருமலை யேறிக்
கொண்டியாந் தருதுங் கண்டனை தெளிகென
நண்புணத் தெளித்த நாடகம் போலப்
படைச்சொற் பாசத் தொடக்குள் ளுறீஇக்
கலாவேற் குருசில் விலாவணை யோம்பி

(எருமையின் செயல்)

15 [1] வயல்கொள் வினைஞர் கம்பலை வெரீஇக்
கயமூழ் கெருமை கழைவளர் கரும்பின்
விண்ட விளமடன் முருக்கித் தண்டாது
தோகைச் செந்நெல் சவட்டிப் பாசிலை
ஒண்கேழ்த் தாமரை யுழக்கி வண்டுகள்
20 ஆம்ப லகவிலை முருக்கிக் கூம்பற்
குவளைப் பன்மலர் குழைத்துத் தவளைத்
தண்டுறை கலங்கப் போகி வண்டினம்
பாட லோவாப் பழனப் படப்பைக்
கூடுகுலைக் கமுகின் கொழுநிழ லசைந்து
25 மன்றயற் பாக்கு மருதந் தழீஇக்

7. சேட்புலம் - நெடுந்தூரமான இடம்.
9. கவித்தலுற்ற - கவித்தற்கு விரும்பிய.
11. கொண்டு யாம் தருதும் - அந்தத் திங்களைப் பிடித்துக் கொண்டு வந்து யாம் கொடுப்போம்.
13. படைச்சொற் பாசத் தொடக்குள் - படைத்து மொழியாகிய கயிற்றின் கட்டினுள்.
14. கலாவேல் - போரிற் சிறந்த வேல்; க. 47 : 262, அடிக். விலாவணை ஓம்பி - அழுகையை ஒழித்து.
16. கழை - கோல். 17. மடல் - தோகை.
18. சவட்டி - அழித்து.
19. வண்டு உகள்; வண்துகள் - வளவிய தாதுக்களுமாம்.
23. படப்பை - தோட்டம். 24. அசைந்து - இளைப்பாறி.
25. மன்று - தொழுவம்.
15 - 25. அகநா. ௪௬: 1 - 6; ௩௧௬ : 1 - 7.

பி - ம். [1] வலைகொள் விலைஞர்.

(அருவி)

குன்றயற் பரந்த குளிர்கொ ளருவி
மறுவின் மானவர் மலிந்த மூதூர்
வெறிது சேறல் விழுப்ப மன்றெனக்
கான வாழைத் தேனூறு கனியும்
30 அள்ளிலைப் பலவின் முள்ளுடை யமிர்தமும்
திரடாண் மாஅத்துத் தேம்படு கனியும்
வரைதாழ் தேனொடு காஅய்விரை சூழ்ந்து
மணியு முத்து மணிபெற வரன்றிப்
பணிவில் பாக்கம் பயங்கொண்டு கவரா
35 நிறைந்துவந் திழிதரு நீங்காச் செல்வமொடு

(மகதநாட்டின் சிறப்பு)

சிறந்த சீர்த்திக் குறிஞ்சி கோலிக்
கல்கெலன் சும்மையொடு கார்தலை மணந்த
முல்லை முதுதிணைச் செல்வ மெய்திப்
பாலையு நெய்தலும் வேலி யாகக்
40 கோல மெய்திக் குறையா வுணவொடு
துறக்கம் புரியுந் தொல்லையி னியன்றது
பிறப்பற முயலும் பெரியோர் பிறந்தது
சிறப்பிடை யறாத தேசிக முடையது
மறப்பெருந் தகையது மாற்றோ ரில்லது
45 விறற்புக ழுடையது வீரிய மடைந்து
துலகிற் கெல்லாந் திலகம் போல்வ

---

27 - 8. அரசன், தெய்வம், குரு என்பவர்களிடம் செல்பவர் வெறுங்கையராகச் செல்லலாகாதென்பர்.

30. அள்ளிலைப்பலவு : சீவக. 2109. அமிர்தம் - கனி.

29 - 31. வாழை, பலா, மா என்னும் மூன்றன் கனிகளும்.

32. காஅய் - சுமந்து.

34. பணிவு - தாழ்வு. பாக்கம் - மலைப்பக்கத்திலுள்ள ஊர்.

15 - 39. ஐந்திணையும் இவற்றிற் கூறப்பட்டிருத்தல் காண்க.

41. புரியும் - விரும்பும்.

43. தேசிகம் - ஒளி; கௌரவம் ; தேசு, தேசிகமெனத் திரிந்த தென்பர் ; " தேசிகம் படத்துடைத்து " சீவக. 1480, ந.

44. மறம் - வீரம். 45. வீரியம் - நிலவளம்.

வான்; இவனுடைய தாய்மரபு தந்தைமரபு இரண்டும் மிகப் புகழ் பெற்றவை; தந்தையின் குலம் குருகுலம்; தாயின் குலம் ஏயர் குலம்; இவன் இந்த இரண்டு குலத்திற்கும் உரிமை பூண்டு விளங்கினான்; ஏயர்குடிக்கும் சேதிநாட்டிற்கும் உரியவர் இவன் தாய்மரபினர்; வத்தநாட்டிற்கும் குருகுலத்திற்கும் உரியவர் இவன் தந்தை மரபினர்; இயற்கை யழகிலும் செயற்கை யழகிலும் சிறந்தவன்; மிக்க இளமைப்பருவத்திலேயே பல வகைக் கலைகளையும் பழம்பிறப்பிற் செய்த தவத்தால் முற்றக் கற்றுத் தேர்ந்தோன்; விற்படை முதலியவற்றிலும், யானையேற்றம் முதலியவற்றிலும், யாழ்விசையிலும் வல்லுநன்; விற்படை முதலிய வித்தைகளைக் கற்பித்தலிலும் சிறந்தவன்; இதுபற்றியே ஆசான், தேசிகனென்னும் சிறப்புப் பெயர்களுக்கு உரியனாக இவன் விளங்கினனென்றும், விசைவீரனென்று சிறப்பித்துப் பாராட்டுதற்கு உரியனாகவிருந்தானென்றும் தெரிகின்றன; செல்வத்துட் செல்வமாகிய கேள்விச்செல்வம் இவன்பால் அமைந்திருந்தது; இவன் யானையை அடக்கும் ஆற்றலுடையானென்றும், யானையிலக்கணத்தை நன்கறிந்தவனென்றும், யானைப்பேசில் வல்லவனென்றும் கருதப்படுகிறான்; பிரசசோதனனுடைய பட்டத்து யானையாகிய **நளகிரி** யென்பது மதவெறிகொண்டு திரிந்து ஒருவருக்கும் அடங்காமல் உஞ்சேனை நகரத்தைப் பாழ்படுத்திய பொழுது அவன் வேண்டுகோட்கிரங்கிச் சிறையினின்றும் சென்று அதனை மிக எளிதில் அடக்கியது பற்றியே அவனாலும் மற்றையோராலும் மிகவும் மதிக்கப்பட்டு விளங்கினான்; அதனாலே தான் பிரசசோதனன் உஞ்சேனை நகரிற் குஞ்சரச்சேரியிலுள்ள மாளிகையை இவனுக்கு இருப்பிடமாய் அமைத்தனன்; இவனுடைய யாழின் பெயர் **கோடபதி** என்பது; எக்காலத்தும் அது தன் தன்மை திரியாதது; இந்திரனால் அது பிரமசுந்தர முனிவருக்கும், பின்பு அவரால் இவனுக்கும் கொடுக்கப்பட்டது; அதன்பால் இவனுக்கு மிக்க அன்பு உண்டு; யாழிற்குரிய மரங்களினியல்பையும் நரம்புகளின் இலக்கணங்களையும் இவன் நன்கு அறிந்தவன்; அதிவிசித்திரகரமான கண்ணி கட்டுதலிலும், வாழைக்குருத்தில் நகத்தினாற் பொய்கை முதலிய பலவகையான சித்திரங்கள் பொறித்தல் முதலியவற்றிலும் வல்லவனாக இருந்தான்; தன்னைச் சுமந்துவந்த பிடி இறக்குந்தருணத்தில் நற்கதியடையுமாறு பஞ்சமந்திரத்தை அதன் காதில் ஓதினமையாலும், பிறவற்றாலும் இவன் மந்திரவித்தையிலும் வல்லவனென்று தெரிகிறது; ஒவ்வொன்றையும் ஆராய்ந்தே தெளிபவன் இவன்; இடவகன், உருமண்ணுவா, யூகி, வயந்தகனென்னும் நான்கு முக்கிய மந்திரிகளும் வேறு பல மந்திரிகளும் இவனுக்கு உண்டு; அவர்கள் இவனுக்காகச் செய்த உதவிகள் மிகப் பல; இந்நால்வரும் இவனுடைய தோழர்களாகவும் விளங்கினார்கள்; அவர்களையன்றி இசைச்சன் முதலிய அன்புடைய தோழர்கள் பலர் இவனுக்கு இருந்தார்கள்; அறப்போரிலும் மறப்போரிலும் பே